

இது ஆதிசங்கரர் அருளிய **ஸ்ரீசக்ரம்.**

இந்த ஒரு சக்ரத்தில் ஒன்பது சக்ரம் அடங்கியுள்ளது. இதில் 64 கோடி தேவதைகள் அரூபா ரூபமாக ஆரோகணித்துள்ளார்கள் என்றும் கூறுகிறார்கள். இதே சக்ரம் தான் மும்பையில் மும்பா தேவி ஆலயத்திலும் பிரதிஷ்டை செய்துள்ளனர். அதன் பிறகே மும்பை செல்வம் கொழிக்கும் நகரமானது என்றும் சிலர் கூறுவார்கள்.



**கொல்லூர் ஸ்ரீ மூகாம்பிகா கோவில்** மங்களூரில் இருந்து சுமார் 135 கி.மீ தொலைவில் உள்ளது.

மங்களூரில் இருந்து பேருந்துகள், கார்கள் மற்றும் ஜீப்கள் மூலமாக கொல்லூர் மூகாம்பிகா கோவிலுக்கு செல்லலாம்.

முகவரி : மூகாம்பிகா கோவில், கொல்லூர், குந்தாப்பூர் தாலுக்கா, உடுப்பி மாவட்டம் - 576 220.

---

22610 கோவை - மங்களூரு இன்டர்சிட்டி சூப்பர் ஃபாஸ்ட் எக்ஸ்பிரஸ்

தினசரி : புறப்பாடு - கோவை - 6.40 : சேருதல் - மங்களூரு 13.50

56323 கோவை - மங்களூரு வேகமான பயணிகள்

தினசரி : புறப்பாடு - கோவை - 7.30 : சேருதல் - மங்களூரு 19.00



மூகாம்பிகையின் படைத்தளபதி வீரபத்திரர். மகிஷாசுர சம்காரத்தில் அம்பாளுக்கு படைத் தளபதியாக துணை நின்றவர். மூகாம்பிகா தேவிக்கு நடக்கும் எல்லா பூஜைகளும் வீரபத்திரருக்கும் செய்யப்படும்.

# ஸ்ரீ மூகாம்பிகா தேவி

## கொல்லூர், கர்நாடகா மாநிலம்.



சிவ ஷக்திய தூயது பவதி ..
சத்தியப் பிரபிவிதும் ..
நசே தேவம் தேவோனகள
குசலஹச்பந்திதுமபீ ..
அகஸ்த்மாம் ..ஆராத்யாம் ..
ஹரிஹர விரிஞ்சாதி பிறவி ..
ப்ரனம்தும் ஸ்தோதும் ம ..
கதமஹிர்த்த புண்யாக பிரபாவதி...ஆ

ஜனனி ஜனனி ஜகம் நீ அகம் நீ
ஜகத் காரணி நீ பரிபூரணி நீ
ஜகத் காரணி நீ பரிபூரணி நீ
ஜனனி ஜனனி ஜகம் நீ அகம் நீ
ஜனனி ஜனனி ஜனனி ஜனனி
ஜனனி ஜனனி ஜகம் நீ அகம் நீ
ஜனனி ஜனனி ஜனனி ஜனனி

சக்தி பீடமும் நீ... ...ஆ...
சக்தி பீடமும் நீ சர்வ மோட்சமும்
நீ...
சக்தி பீடமும் நீ சர்வ மோட்சமும் நீ
சக்தி பீடமும் நீ சர்வ மோட்சமும் நீ
சக்தி பீடமும் நீ சர்வ மோட்சமும் நீ
சக்தி பீடமும் நீ சர்வ மோட்சமும் நீ

ஸ்வர்ண ரேகையுடன் ஸ்வயமாகி வந்த
லிங்க ரூபிணியே மூகாம்பிகையே
லிங்க ரூபிணியே மூகாம்பிகையே
ஸ்வர்ண ரேகையுடன் ஸ்வயமாகி வந்த
லிங்க ரூபிணியே மூகாம்பிகையே
லிங்க ரூபிணியே மூகாம்பிகையே
பல ஸ்தோத்திரங்கள் தர்ம சாஸ்திரங்கள்
பணிந்தேத்துவதும் மணிமேதிரங்கள்
பணிந்தேத்துவதும் மணிமேதிரங்கள்

ஒரு மான் மழுவும் சிறு கூன் பிறையும்
சடை வார் குழலும் பிடி வாகனமும்
சடை வார் குழலும் பிடி வாகனமும்
கொண்ட நாயகனின் குளிர் தேகத்திலே
நின்ற நாயகியே இட பாகத்திலே
நின்ற நாயகியே இட பாகத்திலே
ஜகன் மோகினி நீ சிம்ம வாகினி நீ
ஜகன் மோகினி நீ சிம்ம வாகினி நீ
ஜகன் மோகினி நீ சிம்ம வாகினி நீ
ஜனனி ஜனனி ஜகம் நீ அகம் நீ
ஜகத் காரணி நீ பரிபூரணி நீ

சதுர் வேதங்களும் பஞ்ச பூதங்களும்
ஷண் மார்க்கங்களும் சப்த தீர்த்தங்களும்
ஷண் மார்க்கங்களும் சப்த தீர்த்தங்களும்
அஷ்ட யோகங்களும் நவ யாகங்களும்
தொழும் பூங்கழலே மலை மாமகளே
தொழும் பூங்கழலே மலை மாமகளே
அலை மா மகள் நீ கலை மா மகள் நீ
அலை மா மகள் நீ கலை மா மகள் நீ
அலை மா மகள் நீ கலை மா மகள் நீ
ஜனனி ஜனனி ஜகம் நீ அகம் நீ
ஜகத் காரணி நீ பரிபூரணி நீ

# கொல்லூர் மூகாம்பிகை

மூகாம்பிகை கலைகளுக்கு அதிதேவதையாக கருதப்படுகிறாள். கொல்லூர் மூகாம்பிகை பற்றிய அரிய 60 தகவல்களை பற்றி விரிவாக பார்க்கலாம்.

1. மூகாம்பிகை கலைகளுக்கு அதிதேவதையாக கருதப்படுகிறாள். கவிஞர்கள், எழுத்தாளர்கள், இசைக்கலைஞர்கள், பாடகர்கள், திரைத்துறையினர், நடிகர்கள், நாட்டியமணிகள், சிற்பிகள், ஓவியர்கள் போன்ற பல்வேறு துறையைச் சார்ந்த கலைஞர்கள் தங்கள் கலைத்திறன் சிறப்படைய வேண்டும் என்று கொல்லூர் மூகாம்பிகையை தொழுது செல்கின்றனர்.

2. கொல்லூர் ஆலயத்தில் உள்ள சரஸ்வதி மண்டபத்தில் கவிஞர்களும் இசைக்கலைஞர்களும், நாட்டியக் கலைஞர்களும் தங்கள் படைப்புகளை படைத்து அம்மனுக்கு கலாஞ்ஜலி செய்கிறார்கள்.

3. அம்மனை சீவேலி என்று ஆலயத்தை திருவலம் செய்விக்கும் போது காலையில் உலா வருகின்ற தேவி காளியின் அம்சமாகவும், உச்சியில் உலா வருகின்ற தேவி திருமகளின் அம்சமாகவும், இரவில் உலா வருகின்ற தேவி கலைமகள் அம்சமாகவும் பாவிக்கப்படுகிறாள்.

4. கலைஞர்களாக பிறந்த ஒவ்வொருவரும் தங்கள் கலைப்பயணத்தில் முழுமையான வெற்றி அடைய தங்கள் கலைப்பணியை அன்னை மூகாம்பிகைக்கு அர்ப்பணித்து தொடங்க வேண்டும் என்பது ஐதீகமாகும்.

5. அனைத்து ஆலயங்களிலும் மூல விக்கிரகம் கல்லால் அமைந்திருக்கும் அல்லவா? ஆனால், மூகாம்பிகை அம்மனின்

ஆலயத்தில் மட்டும் மூல விக்கிரகம் பஞ்சலோகத்தால் ஆனது.

6. அம்பாள் பத்மாசனத்தில் அமர்ந்த கோலம் ஆதி சங்கரர் தன் மனக்கண்ணில் இருந்த அம்மன் திருவுருவத்தை விஷ்வகர்மாக்களிடம் விளக்கி அவ்வாறே பஞ்சலோகத்தில் செய்யச் சொன்னார். அந்த ஐம்பொன் விக்கிரகமே இன்றும் ஆலயத்தில் அலங்கார தேவதையாக உள்ளது.

7. மூகாம்பிகை அம்மனின் விக்கிரகத்திற்கு பக்தர்கள் புடவை சார்த்துதல் உண்டு. ஆனால், இந்த புடவை சாத்தும்போது தூய பட்டினாலான புடவையை மட்டுமே அம்பாளுக்கு கட்டுவார்கள். ஏனைய புடவையை அம்பாளின் மீது போத்தி விடுவார்கள்.

8. அம்பாளுக்கு துளசி மற்றும் பிச்சிப்பூவால் ஆன மாலையையும் அணிவிக்கிறார்கள். தமிழகத்தில் தேன்பூ என்று வழங்கப்படும் சிகப்பு நிறத்தில் கொத்து கொத்தாக உள்ள இந்த காட்டு மலர்களினால் ஆன ஆரத்தை விசேஷமானது என்று அணிவிக்கிறார்கள்.

9. அபிஷேக ஆராதனைகள் அனைத்தும் சுயம்பு லிங்கத்திற்கே பிரதானமாக செய்யப்படுகிறது. மேலும் தங்க ரேகையை அனைவரும் எல்லா நேரங்களிலும் பார்க்காதபடி தங்க கவசம் கொண்டும் மூடப்பட்டுள்ளது.

10. மகாபூஜை செய்பவர்கள் மற்றும் முக்கிய பிரமுகர்கள், தங்க ரேகைக்குரிய பூஜைகள் செய்பவர்களுக்கு உச்சி நேரத்தில் லிங்கத்தின் தங்கக்கோட்டை சூரிய ஒளியை கண்ணாடி மூலம் கர்ப்பக்கிரகத்தில் பிரதிபலித்து தங்க ரேகையை காட்டுவது வழக்கமாகும்.

11. கொல்லூர் கோவில் பூசாரிகளை புரோகிதர்கள் என்றே அழைக்கின்றனர். கோவிலில் அனைத்து தேவைகளும்

சேவைகளும் இவர்களாலேயே நடைபெறுகிறது.

12. இந்த ஆலயத்தின் பூஜை முறைகள் சிருங்கேரி மடத்தை அனுசரித்துள்ளது.

13. சுயம்புலிங்கத்தின் ரேகையின் விசேஷம் என்னவென்றால் இது நெற்றிக்கு இடுகின்ற கீற்று சந்தனம் போன்று இருப்பதும் லிங்கத்தின் உச்சியை வலப்புறம் பெரிதாகவும் இடப்புறம் சிறிதாகவும் பிரிக்கின்ற அழகே ஆகும்.

14. சிறிய உட்பிரகாரத்தைக் கொண்ட ஆலயமான தேவியின் திருச்சன்னதியில் அடுத்து வருகின்ற பக்தர்களும் தரிசிக்க "வேகமாக போங்கள்" என்று சொல்லும் போது சில பக்தர்களுக்கு தாங்கள் தொலைதூரத்தில் இருந்து வந்து மிக சொற்பமான நேரம் அம்மனை தரிசிக்கின்றோமே என்ற மனவருத்தம் அடைகின்றனர்.

15. அம்மனைத் தரிசிக்க வருபவர்கள் இயன்றவரை ஒரு நாளாவது முழுதாக தங்கி ஆலயத்திலேயே அதிகநேரம் இருந்து வரிசையில் பலமுறை நின்று நித்திய பூஜைகள் அனைத்தையும் கண்குளிரக் கண்டு மூகாம்பிகையின் அருளைப் பெறுதல் வேண்டும்.

16. பக்தர்கள் தங்கள் கோத்திரம், குடும்பத்தில் உள்ள அனைவருடைய நட்சத்திரம், பெயர்கள் ஆகியவற்றை கூறி சங்கல்பம் செய்து கொள்வது மற்ற ஆலயங்களில் இல்லாத ஒன்றாகும்.

17. அலங்காரம், புஷ்பாஞ்லி, ஆராதனை போன்றவை மட்டுமே இந்த மூகாம்பிகைக்கு செய்யப்படுகின்றன.

18. கிரகண நேரத்திலும் கருவறை திறக்கப்பட்டு பூஜைகள் நடத்தப்படும் திருத்தலம் இது.

19. மூகாம்பிகையை பூஜிக்க பிரம்மச்சாரிகள் அனுமதிக்கப்படுவதில்லை.

20. அக்னி தீர்த்தம், காசி தீர்த்தம், சுக்ல தீர்த்தம், மது தீர்த்தம், கோவிந்த தீர்த்தம், அகஸ்திய தீர்த்தம் ஆகியவை இத்தல தீர்த்தங்கள்.

21. இத்தலத்தில் தேவிக்கு எடுக்கும் விழாவில் மூகனும் கொண்டாடப்படுகிறான்.

22. சரஸ்வதி பூஜையன்று மூகாம்பிகையின் சன்னதியில் உள்ள சரஸ்வதி தேவி கருவறையிலிருந்து வெளிவந்து பக்தர்களுக்கு தரிசனம் அளிக்கிறாள்.

23. மூகாம்பிகை தேவி கலைமகள் அம்சமாகத் திகழ்வதால் கல்வி கேள்விகளில் சிறந்து விளங்க அம்பிகையை பிரார்த்தனை செய்து கலாரோகணம் எனும் துதியை பாடுகிறார்கள்.

24. மூகாம்பிகை ஏவல், பில்லி, சூன்யம், துஷ்ட தேவதைகளால் வரும் துன்பங்கள், சாபத்தால் தோன்றும் கோளாறு, தடை அனைத்தையும் தவிடு பொடியாக்கும் சர்வ வல்லமை படைத்தவள்.

25. அனைத்து மதத்தினரும் வழிபடும் அற்புததேவி இந்த மூகாம்பிகை. திப்பு சுல்தான் இங்கு வந்தபோது இஸ்லாமிய முறைப்படி சலாம் செய்தார். இன்றும் சலாம் மங்களாரத்தி இத்தலத்தில் பிரசித்தம்.

26. மூகாம்பிகை தேவிக்கு ஒரு மணி நேரத்திற்கு ஒரு முறை அலங்காரம் செய்யப்படுகிறது.

27. வெள்ளிக்கிழமை ஆலயத்தில் உள்ள 1008 தீபங்கள் கொண்ட மரவிளக்கு தீபங்கள் ஏற்றப்படுகின்றன. மேலும் கருவறை முழுவதும் தீபங்கள் ஏற்றப்படும்.

28. மூகாம்பிகை தேவியின் மந்திரத்தில் வாக்பவ பீஜமான "ஐம்" நான்கு முறை இடம் பெற்றுள்ளது. இது அறம், பொருள், இன்பம், வீடுபேறு எனும் சதுர்வித புருஷாத்தங்களையும் பக்தர்களுக்கு தரும் என்பதை குறிக்கிறது.

29. மூகாம்பிகையின் பாதங்களில் அர்ச்சனை செய்த குங்குமத்தை நெற்றியில் இட்டுக்கொள்வதால், நான்முகன் நம் தலையில் எழுதிய கெட்ட எழுத்தும் குங்கும மகிமையால் அழிந்து விடுமாம்.

30. பூர்வ புண்ணியம் மேலோங்கப் பெற்றவர்கள் மற்றும் தம் வல்வினை நீங்கும் காலம் நெருங்கியவர்களே கொல்லூர் சென்று அங்கே கோலோச்சும் மூகாம்பிகையை தரிசிக்க முடியும் என்று சொல்லப்படுகிறது.

31. மூகாம்பிகை கருவறைக்குள் நுழையும் ஆண்கள் மேல் சட்டை அணிந்திருக்கக்கூடாது என்ற கேரள வழக்கம் இங்கும் கடைபிடிக்கப்படுகிறது.

32. அன்னையின் சன்னதிக்கு நேர் பின்புறம், அன்று ஆதி சங்கரர் தியானம் செய்ய அமர்ந்த இடம் இன்றும் கூட சங்கரர் பீடம் என்று போற்றிப் பாதுகாக்கப்படுகிறது.

33. அன்னைக்குப் போரில் உதவிபுரியப் படைக்கப்பட்ட வீரபத்திரர், இந்த தேசத்திற்கு ரட்சாதிகாரியாக வழிபடப்படுகிறார்.

34. மூகாம்பிகா ஆலயத்தில் தினசரி மதியம் மற்றும் இரவு ஆகிய இரு வேளைகளிலும் அன்னதானம் உண்டு.

35. சத்ருவை அழித்த அன்னையின் சக்தி இங்கு மிகுந்திருப்பதால், சத்ருக்களால் எந்த ஆபத்தும் வராமல் இருக்க இங்கு ஏராளமானவர்கள் சண்டி ஹோமம் செய்கிறார்கள்.

36. மூகாம்பிகை ஆலயத்தில் 2 விதமான பூஜைகள் மரபாக கடைபிடிக்கப்பட்டு வருகிறது. ஒன்று பலிபீட பூஜை மற்றொன்று விஜய் யக்ஞ சாஸ்திர பூஜையாகும்.

37. திருப்பதி, திருவண்ணாமலை தலங்களில் பல்வேறு திருப்பணிகள் செய்துள்ள விஜயநகர மன்னர் கிருஷ்ணதேவராயர் கொல்லூர் மூகாம்பிகைக்கும் நிறைய சேவை செய்துள்ளார். மூகாம்பிகைக்கு தங்கத்தால் முகக்கவசம் செய்து கொடுத்தது அவர்தான்.

38. கொல்லூரில் புனித தீர்த்தமாக உள்ள சவுபர்ணிகா நதியில் 62 வகை மூலிகைகள் கலந்து வருவதாக சொல்கிறார்கள். எனவே அந்த நதியில் நீராடினால் உடலும் உள்ளமும் புத்துணர்ச்சிப்பெறும்.

39. கொல்லூர் மூகாம்பிகை ஆலயத்தில் பக்தர்கள் 64 விதமான, வித்தியாசமான பூஜைகள், சேவைகளில் பங்கேற்க வசதி செய்யப்பட்டுள்ளது. ஒவ்வொரு சேவைக்கும் தனித்தனி கட்டணம் நிர்ணயித்துள்ளனர்.

40. தினமும் இத்தலத்தில் சண்டிஹோமம் நடத்தப்படுகிறது. கட்டணம் ரூ. 8 ஆயிரம்.

41. கர்நாடகா மாநிலத்தில் உள்ள 7 முக்தி தலங்களில் கொல்லூர் மூகாம்பிகை ஆலயமும் ஒன்றாக கருதப்படுகிறது.

42. மூகாம்பிகை ஆலயத்துக்கு, அறிவுக்கோவில் என்ற பெயரும் உண்டு.

43. ஆண்கள் கால்சட்டை, பெர்முடாஸ், தொப்பி, லுங்கி போன்றவை அணிய தடை விதிக்கப்பட்டுள்ளது. இதனால் கொல்லூர் ஆலயத்துக்கு வரும் ஆண்களில் 90 சதவீதம் பேர் வேட்டி அணிந்தே வருகிறார்கள்.

44. கர்ப்பமான பெண்கள் 7 மாதம் கடந்த பிறகு ஆலயத்துக்குள் செல்லக்கூடாது என்று அறிவிக்கப்பட்டுள்ளது.

45. குழந்தை பெற்ற பெண்கள் 11 நாட்கள் கழித்தே ஆலயத்துக்கு வரவேண்டும் என்ற விதி வகுக்கப்பட்டுள்ளது.

46. சிவராத்திரி தினத்தன்று இரவு முழுவதும் மூகாம்பிகை ஆலயம் திறந்து இருக்கும். லிங்கத்துக்கு சிறப்பு பூஜைகள் நடத்தப்படும்.

47. கர்நாடகா முன்னாள் முதல் மந்திரி குண்டுராவ் கொடுத்த வெள்ளி வாளும் இங்கு உள்ளது.

48. ஆடி, அஷ்டமி திதியில் வரும் ரோகிணி நட்சத்திரத்தன்று உற்சவத்திருமேனியை சுக்கில தீர்த்தத்திற்கு எடுத்துச் சென்று நீராடுவார்கள்.

49. முதன் முறையாக திருக்கோவிலுக்கு வருபவர்கள் தாம் தங்கிய இல்லத்தின் அர்ச்சகருடன் சவுபர்னிகா ஆற்றுக்குச் சென்று அவர் கூறும் மந்திரங்களை கூறி ஆற்றில் நீராட வேண்டும் இதற்கு "சங்கல்பஸ்நானம்" என்று பெயர்.

50. கொல்லூர் மூகாம்பிகை ஆலயத்தில் உள்பிரகாரத்தில் சுற்றி வரும்போது ஒரு இடத்தில் வெள்ளியால் செய்யப்பட்ட பெரிய பாம்பு உருவம் சுவரில் பதிக்கப்பட்டு இருப்பதை காணலாம். அதை பக்தர்கள் தொட்டு வணங்கி செல்கிறார்கள். இந்த வழிபாடு ராகு–கேது தோஷத்தை நிவர்த்தி செய்யும் என்று நம்பப்படுகிறது.

51. கொல்லூரில் கடைகள் மிகமிக குறைவாகவே உள்ளன. இதனால் எல்லாக் கடைகளிலும் கூட்டம் காணப்படுகிறது. மதிய நேரங்களில் கூட்டம் குறைவாக இருக்கும் என்பதால் பரிசு பொருட்கள் அந்த நேரத்தில் சென்று வாங்கலாம்.

52. கொல்லூர் ஆலயத்துக்கு வெளியூர்களில் இருந்து வரும் பக்தர்கள் அதிகாலை நேரத்தில் வருவதால் காலை நேர வழிபாட்டுக்கு 3 மணி நேரம் ஆகும். தீபங்கள் ஏற்றப்படும்.

## ஸ்ரீ மூகாம்பிகைதேவி

## "சௌந்தர்ய லஹரி" என்றால் என்ன?

அம்பாள்...

வெள்ளைத் தாமரை பூவில் இருப்பாள்! வீணை செய்யும் ஒலியில் இருப்பாள்! என்று பக்தி பரவசத்துடன் பாடினார் மகாகவி பாரதியார்.

பூக்கள் பல நிறங்களில் உள்ளன. அது ஏன் வெள்ளைத் தாமரையை அம்பாள் தேர்ந்தெடுத்தார்? வெண்மை நிறபட்டு உடுத்தியிருக்கிறாள்.

ஞானத்தின் அடையாளம் வெண்மை. எனவே, கலை மகளாகிய கல்விக்கடவுள் சரஸ்வதி வெண்பட்டு உடுத்தி வெள்ளைத்தாமரையில் அமர்ந்துள்ளார். கல்வி தூய்மையானது மாசற்றது என்பதும் காரணம்.

கல்விக் கடவுளை பிரும்ம சொரூபினி என்றும் கூறுவர். ஞானம் விரிந்து – பரந்தது என்பதால் மலர்களிலேயே தாமரை சரஸ்வதிக்கு உரியதான்து.

ஆதிசங்கரர் "சௌந்தர்ய லஹரி" என்று பூமாலை சூடிய அம்பாளுக்கு பாமாலை சூட்டினார்.

"சௌந்தர்ய லஹரி" என்றால் அதன் பொருள் என்ன தெரியுமா? "சௌந்தர்ய" என்றால் "அழகு", "லஹரி" என்றால் "அலைகள்", "அழகின் அலைகள்" என்று அர்த்தம்.

தேவி மூகாம்பிகா வடிவில் அம்பாள் – ஆதி சங்கரருக்கு பிரத்யட்சமான பிறகே – பகவத் பாதாளுக்கு "சௌந்தர்ய லஹரி" திருவில் உருவாகியது என்று கொல்லூர் மூகாம்பிகா தேவியின் திருத்தல வரலாற்று குறிப்புகள் கூறுகின்றன.

## ஸ்ரீ சக்ரம்

ஆதிசங்கர பகவத் பாதாள், இந்த மூகாம்பிகாவில் அருளிய ஸ்ரீ சக்ரத்தில் ஒன்பது சக்ரம் அடக்கம். இதில் 64 கோடி தேவதைகள் ஆரோகணித்துள்ளார்கள் என்று கூறுகிறார்கள். இதே சக்ரம் தான் மும்பையில் உள்ள மும்பாதேவி கோயிலிலும் பிரதிஷ்டை செய்துள்ளனர். அதன் பிறகே மும்பை செல்வம் கொழிக்கும் நகரமானது என்றும் நம்புகிறார்கள்.

## குட சாத்திரி மலை

இது மேற்குத் தொடர்ச்சி மலைகளின் அற்புதம்.

பயணம் மிகவும் கடினமானது. பெண்கள், குழந்தைகள் இங்கு போவதில்லை, காரணம் நல்ல பாதை இல்லாதது தான். கோயிலின் கிழக்கு பாகத்திலிருந்து இந்த குடசாத்திரி சுமார் 45 கி.மீ. தூரம் உள்ளது. இப்போதும் பஸ் வசதி குறைவு. காரணம் மோசமான பாதை. தனியார் ஜீப், கார்கள் மட்டுமே போகிறது. எனினும் குறைந்தது சில மைல்களாவது காட்டு – மலைப் பகுதிகளில் நடக்க வேண்டும். மழைக்காலங்களில் குடசாத்திரி மலைப் பகுதிகளில்

பயங்கர அட்டை பூச்சிகள் தொல்லைகளும் உண்டு. எனினும், இக் காலத்தில் பெரும் அளவு காடுகள் அழிக்கப்பட்டுள்ளதால், பயணத்தின் கடுமை குறைவு.

குடசாத்திரி மலைப் பகுதிகளில் பல குகைகள், பழங்கால சுவர்கள், கோயில் மண்டபங்கள் ஏராளம். இவை நமது ஆன்மீக கலாச்சாரங்களின் பழமைக்கு அடையாளங்களில் ஒன்று. ஆதிசங்கரர் தவமிருந்த "சித்தர மூலா" என்ற பீடம் இங்கு உள்ளது. மகிஷாசுர மர்த்தினி கோயிலும் சில பட்டர்களின் வீடுகளும் குட சாத்திரி மலையில் இருக்கின்றன. கடினமான பயணத்தை எதிர்கொள்ளும் உடல் பலமும், துணிவும் உள்ளவர்கள் குடசாத்திரி மலை போகலாம்.

ஒரு மனிதன் வாழ்க்கையில் எத்தனை வசதிகள் இருந்தாலும் பணமும், புகழும் எத்தனையிருப்பினும் அவன் மன அமைதி, ஆத்ம திருப்தி பெற ஒரே வழிதான் உண்டு. அது தெய்வ நம்பிக்கை. ஆன்மீக சிந்தனை – இவைகள் தான்.

## கஷாய தீர்த்தம்

தினமும் இரவு ஒன்பது மணிக்கு அம்பாளுக்கு நைவேத்தியம் முடிந்த பிறகு, ஒரு தீர்த்தம் தருவார்கள். இது மிகவும் விஷேச மருத்துவ குணம் உடையது. இதை கஷாய தீர்த்தம் என்று குறிப்பிடுவார்கள். சூடான பானகம் மாதிரி, சுக்கு காரம் இருக்கும்.

குட சாத்திரி மலை மற்றும் காட்டுப் பகுதிகளில் வாழும் மக்கள் ஒரு காலத்தில் கடும் விஷக்காய்ச்சலினால் தவித்தார்களாம் அப்போது அம்மக்களை நோயிலிருந்து மீட்டது இந்த கஷாயம்தான். இது பல காலமாக கூறப்படும் தகவல்.

# ஸ்ரீ மூகாம்பிகா
# அஷ்டோத்தர சதநாமவள்ளி

(ஒவ்வொரு நாம முடிவிலும் நமோ நமஹ: என்று கூறவும்)

1. ஓம் ஸ்ரீநாதாதி தனூத்த ஸ்ரீ மஹாலக்ஷ்ம்யை நமோ நம:
2. பவ பாவித சித்தேஜ: ஸ்வரூபாயை
3. க்ரு தானங்கவதூத் கோடி ஸௌந்த்ர்யாயை
4. உத்யாதித்ய சாஹஸ்ர ப்ரகாஸாயை
5. தேவதார்பித ஸஸ்த்ராஸ்த்ர பூஷானாயை
6. ஸரணாகத ஸந்த்ராண நியோகாயை
7. ஸிம்ஹராஜ வரஸ்கந்த ஸம்ஸ்திதாயை
8. அட்டகாஸ பரித்ரஸ்த தைத்யௌகாயை
9. மஹா மஹிஷ தைத்ய இந்த்ர விகாதில்யை
10. புரந்தர முகாமர்த்ய வரதாயை
11. கோலரிஷி ப்ரவர தான ப்ரத்யயாயை
12. ஸ்ரீ கண்ட க்லப்த ஸ்ரீசக்ரமத்யஸ்தாயை
13. மிதுனாகார கலித ஸ்வபாவாயை
14. இஷ்டனு ரூப ப்ரமுக தேவதாயை
15. தப்த ஜாம்பூநந ப்ரக்ய ஸரீ ராயை
16. கேதகீ மாலதீ புஷ்ப புஷிதாயை
17. விசித்ர ரத்ன ஸம்யுக்த க்ரீடாயை
18. ரமணீய த்வீரேபாளி குந்தளாயை
19. அர்த சுப் ராம்சுளி விப்ரா ஜல்லலடாயை
20. முகசந்த்ராங்க கஸ்தூரி திலகாயை
21. மனோஜ்ரு வக்ர ப்ருவல்லீ யுகளாயை
22. ரஜனீஸ தினேஸாக்னி லோசனாயை
23. கருணா ரஸ ஸம்ஸக்த நேத்ராந்தாயை

24. சாம்பேய குஸு⁶மோத்பாஸி நாஸிகாயை
25. ஓம் தாரகாப நாஸாரெத்ன பாஸு⁶ராயை
26. ஸத்ரத்ன கசித ஸ்வர்ண தாடங்காயை
27. ரத்னா தர்ஸப்ரதீகாஸ கபோலாயை
28. தாம்பூல ஸோபித வர ஸ்மிதாஸ்யாயை
29. குந்த குட்டமல ஸங்காஸ தஸனாயை
30. புல்ல ப்ரவாள ரதன வஸநாயை
31. ஸ்வகாந்த ஸ்வாந்த விக்ஷோபி சிபிகாயை
32. முக்தாஹாரலஸத் கம்பு கந்தராயை
33. ஸாஷ்டா பதாங்கத புஜசதுஷ்காயை
34. ஸங்க சக்ர வராபீதி கராப்ஜாயை
35. மதங்கஜ மஹா கும்ப வக்ஷோஜாயை
36. குசப ஆர நமன் மஞ்ஜு மத்யமாயை
37. தடித் புஞ்ஜாப கௌஸேய ஸு⁶சேலாயை
38. ரம்ய கிங்கிணிகா காஞ்சீ ரஞ்ஜிதாயை
39. அதி மஞ்ஜுள ரம்போரு த்வித யாயை
40. மாணிக்ய முகுடா ஸ்ரீவத்ஸ யுக்தாயை
41. தேவேஸ முகுடோத்தீப்த பதாப்ஜாயை
42. பார்கவாராத்ய காங்கேய பாதுகாயை
43. மத்த தந்தாவளோத்தம்ஸ கமனாயை
44. குங்குமாகரு பத்ர ஸ்ரீசர்சிதாங்க்கை
45. ஸு⁶சாமராமரீ ரத்ன வீஜிதாயை
46. ப்ரணதாகிய ஸௌபாக்ய ப்ரதாயின்யை
47. தானவார்தித ஸக்ராதி ஸன்னுதாயை
48. தூம்ர லோசன தைத்தேய தஹனாயை
49. சண்ட முண்ட மஹா ஸீர்ஷ கண்டனாயை

50. ரக்தபீஜ மஹாதைத்ய ஸிக்ஷகாயை

51. ஓம் மதோத்தக நிஸ6ம்பாக்ய பஞ்ஜனாயை

52. கோர ஸ6ம்பாஸ6ராதிஸ நாஸநாயை

53. மதுகைடப ஸம்ஹார காரணாயை

54. விரிஞ்சிமுக ஸங்கீத ஸம்ஜ்ஞாயை

55. ஸர்வபாதா ப்ரஸமன சரித்ராயை

56. ஸமாதி ஸ6ரதக்ஷமாப்ருதர்சிதாயை

57. மார்கண்டேய முனி ஸ்ரேஷ்ட ஸம்ஸ்துதாயை

58. வ்யாளாஸ6ர த்விஷ்த் விஷ்ணு ஸ்வரூபிண்யை

59. க்ரூர வேத்ராஸ6ர ப்ராண மாரணாயை

60. லக்ஷ்மீ ஸரஸ்வதி காளீ வேஷாட்யாயை

61. ஸ்ருஷ்டி ஸ்திதிலய க்ரீடா தத்பராயை

62. ப்ரஹ்மோபேந்த்ர கிரிஸாதி ப்ரதீக்ஷ்யாயை

63. அம்ருமதப்தி மணித்வீப நிவாஸின்யை

64. நிகிலானந்த ஸந்தோஹ விக்ரஹாயை

65. மஹா கதம்பவிபின மத்யகாயை

66. அனேககோடி ப்ரஹ்மாண்ட ஜனயித்ர்யை

67. முமுக்ஷீஜன ஸன்மார்க தர்ஸிகாயை

68. த்வாதஸாந்த ஷடம்போஜ ஸதனாயை

69. ஸஹஸ்ரார மஹாபத்ம விஹாராயை

70. ஜன்மப்ரமுக ஷட்பாவ வர்ஜிதாயை

71. மூலாதாராதி ஷட்சக்ர நிலயாயை

72. சராசராத்மக ஜகத்ஸம் ப்ரோதாயை

73. மஹாயோகி ஜன ஸ்வாந்த நிஸாந்தாயை

74. ஸர்வவேதாந்த ஸத்ஸார ஸம் வேத்ராயை

75. ஹ்ருதி நிக்ஷிப்த நிஸ்ஸேஷ ப்ரஹ்மாண்டாயை

76. ஸர்வாத்ம தேவேஸ்வர ப்ராண வல்லபாயை

77. துஷாராசல ராஜன்ய தனபாயை

78. ஸர்வாத்ம புண்டரீகாக்ஷ ஸஹோதர்யை

79. மூகீக்ருத மஹா முக தானவாயை

80. துஷ்டமுக ஸிரஸ்ஸைல குலிஸாயை

81. குடசோபத்யகா முக்ய நிவாஸாயை

82. வாரண்ய தக்ஷிணார்தாங்க மஹோஸாயை

83. ஜ்யோதி ஸ்சக்ராஸனாமிக்ய பீடஸ்தாயை

84. நவகோடீ மஹ துர்க ஸம்வ்ருதாயை

85. விக்னேஸ ஸ்கந்த வீரேஸ வத்ஸலாயை

86. கலி கல்மஷ வித்வம்ஸ ஸமர்தாயை

87. ஷோடஸார்ண மஹா மந்த்ர மந்திராயை

88. பஞ்ச ப்ரணவ லோலம்ப பங்க ஜாயை

89. மிதுனார்சன ஸஹ்ருஷ்ட ஹ்ருதாயாயை

90. வஸுதேவ மநோபீஷ்ட பலதாயை

91. கம்ஹாஸுர வராராதி பூஜிதாயை

92. ருக்மிணி ஸ்த்ய பாமாதிவந்திதாயை

93. நந்த கோப ப்ரியாகர்ப ஸம்பூதாயை

94. கம்ஸ ப்ராணாபஹரண ஸாதனாயை

95. ஸுவாஸினீ வதூ பூஜா ஸுப்ரீதாயை

96. ஸஸாங்க ஸேகரோத் ஸங்க விஷ்டரயை

97. விபுதாரி குலாரண்ய குடாராயை

98. ஸம்ஜீவநௌபத த்ராத த்ரிதஸாயை

99. மாத்ரு ஸௌக்யார்தி பக்ஷீஸஸேவிதாயை

100. கடாக்ஷ லப்தஸக்ர ப்ரத்யூம்னாயை

101. இந்த்ர க்லப்தோத்ஸவ உத்க் ருஷ்ப்ர ப்ரஹருஷ்டாயை

102. தாரித்ர்ய துக்க விச்சேத நிபுணாயை
103. அனன்யபாவ ஸ்வர்காபவர்கதாயை
104. ஓம் அப்ரன்ன பவத்ராஸ தாயகாயை
105. நிர்ஜிதாஸே பாஷண்ட மண்டலாயை
106. ஸிவாகூஷி குமதாஸ்வாத சந்த்ரிகாயை
107. ப்ரவர்தித மஹாவித்யா ப்ரதானாயை
108. ஸர்வ ஸக்த்யைரூப ஸ்ரீ மூகாம்பாயை

இதி அஷ்டோத்தர ஸத நாமாவளீ ஸம்பூர்ணம்!!!

## பூஜை நேரங்கள்

தினசரி

| | |
|---|---|
| காலை 5.00 மணி | சன்னதி திறப்பு |
| 6.00 மணி | பூஜை ஆரம்பம் |
| 7.00 மணி | தந்த தாவனம் |
| 8.00 மணி | மாங்கல்ய தீபாராதனை சிவேலி |
| மதியம் 12.00 மணி | பூஜை ஆரம்பம் |
| 12.15 மணி | மகா நைவேத்தியம் |
| 12.30 மணி | மகா தீபாராதனை சிவேலி |
| 1.30 மணி | சன்னதி அடைப்பு |
| மாலை 3.00 மணி | சன்னதி திறப்பு |
| 7.00 மணி | பூஜை ஆரம்பம் |
| 7.30 மணி | தீபாராதனை – பரிவார பூஜை |
| 8.00 மணி | தீபாராதனை – சிவேலி |
| 9.00 மணி | கஷாயம் – நைவேத்தியம் தீர்த்தம் வழங்குதல், சன்னதி அடைப்பு |



இதய தெய்வம் என்று இன்றும் தமிழ் மக்கள் போற்றும் எம்.ஜி.ஆர். அவர்கள் தாய் மூகாம்பிகைக்கு அளித்த **தங்கவாள்.** வெள்ளி உறையில் இடப்பட்ட தங்கவாள் ஒரு கிலோ எடை. எம்.ஜி.ஆர். அவர்களை இறுதி நாள் வரை புகழின் உச்சியில் வைத்து தமிழக முதல்வராக அழகு பார்த்தது அம்பாள் அருள்தானாம்.

Dindigul
TN - India

Call us
+91 95970 89588

RUB NRUN® oil
HERBAL PAIN MANAGEMENT

Get relief from
Chronic neck & back pain & spine
Very effective pain killer







# RUB NRUN® oil

## HERBAL PAIN MANAGEMENT

# SRI BALAJI MARKETING

**Exporter & Distributor**

Siddha & Ayurvedic Natural Herbal Medicine
& Pharmaceutical Medicine

**M. GOPIKRISHNAN** MBA., M.Phil., Ph.D.,
Director - Marketing

"Thirumalai Illam"
9-5-1, Bazaar Street, Upstairs, Ayyampalayam
Pin : 624 204, Dindigul, Tamilnadu, India
Mobile 094426 17374, 95970 89588
email : rubnrunindia@gmail.com
website : www.rubnrun.in